[10th September 1960

SRI A. VEDARATHNAM: லஞ்ச ஊழல்களை விசாரித்து முடிவு செய்ய இத்தகைய சிறந்த ஸ்தாபனம் இருந்தும் சில அரசியல் கட்சிகள் சர்க்காரில் சர்வம் லஞ்சம் மயம் என்று பிரசாரம் செய்கிறார்களே, அவர்களிடமிருந்து "ஸ்பெஸிபிக்காக" இந்த ஸ்தாபனத்திற்கு ஏதேனும் லஞ்சம் வாங்கியது பற்றி புகார்கள் வந்திருக்கின்றனவா? அதன்பேரில் அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்திருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இத்தகைய புகார்களை விசாரிப்பதற்கு டிரிபியூனல் ஒன்றும் இல்லை.

*Sri Kailasanathar temple (Velvimangalam)*

*592 *Q*.—SRI K. R. VISWANATHAN: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the years for which no managing trustee for the Sri Kailasanathar temple in Velvimangalam village, Perambalur taluk, was appointed during the period 1949 to 1959 and the reason therefor;

(*b*) the date on which the last managing trustee was appointed;

(*c*) whether any allegation was made that this managing trustee was the 'de jure' one while the 'de facto' trustee was the one who is closely related to him and he was removed from service for misbehaviour and irregularities; and

(*d*) if so, whether it was enquired into?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) There were managing trustees from 1949–59.

(*b*) 9th February 1959.

(*c*) & (*d*) Yes, Sir.

SRI K. R. VISWANATHAN: தலைவர் அவர்களே, 1959-ம் ஆண்டு பெப்ரவரி மாதம் 9-ம் தேதியில் நியமிக்கப்பட்ட மானேஜிங் டிரஸ்டி, அதற்கு முன்பு நியமிக்கப்பட்ட மானேஜிங் டிரஸ்டி அந்தக் கோயிலில் சார்ஜ் வாங்குவதற்கு முன்னாலேயே அவசரம் அவசரமாக நியமிக்கப்பட்டாரா? அம்மாதிரி நியமிக்கப்படுவது சட்ட விரோதமல்லவா? அதற்காக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தச் சட்டப்படி டிரஸ்டிகளை ஏரியா கமிட்டி நியமிக்கிறார்கள். அதில் ஏதாவது தவறு இருந்தால் அப்பீல் செய்யப்படுகிறது. சட்டப்படி அப்பீல் வந்தால் அது கவனிக்கப்பட்டு, என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படவேண்டுமோ அம்மாதிரி நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுகிறது. இந்த விஷயத்தில் டிரஸ்டிகளுக்குள்ளே ஒருவருக்கொருவர் கட்சி, ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பு கிடையாது. இந்த நிலையிலே அறநிலைய பாதுகாப்பு இலாகாவினர் இதை ஒரு நிர்வாக அதிகாரிக்கு கொஞ்ச காலத்திற்கு விட்டுவிடலாம் என்று உத்தரவு போட்டார்கள். அதை நிறைவேற்றிக்கொண்டு வருகிறார்கள்.

10th September 1960]

SRI K. R. VISWANATHAN: அந்த நிர்வாக அதிகாரி, புதிதாக நியமிக்கப் பட்டிருந்தபோதிலும், அவராலும் இந்த கடைசியாக நியமிக்கப்பட்ட மானேஜிங் டிரஸ்டியிடமிருந்து சார்ஜ் வாங்க முடியவில்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அப்படியானால், அதைச் சரிசெய்ய துரிதமாக என்ன நடவடிக்கை எடுக்க உத்தேசம்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அந்த நிர்வாக அதிகாரியாலும் வாங்க முடியவில்லை யென்றால், கோர்ட்டுக்குப் போக வேண்டித்தான் இருக்கும். என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமோ, அது எல்லாம் எடுக்கப்படும்.

*National Extension Block*

*593 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, கோபிச்செட்டிப்பாளையம் தாலுகா, தாளவாடிமலைப் பிரதேசத்தைச் சேர்ந்த கிராமங்களடங்கிய தேசிய அபிவிருத்தித் திட்டம் ஒன்றை அமுலாக்குவதற்காக பரிசீலனை அரசாங்கத்தாரால் கவனிக்கப்பட்டு வருகிறதா?

(ஆ) அப்படியானால் இத்திட்டம் எப்போது அமுலுக்குக் கொண்டு வரப்படும்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir.

(*b*) This is under correspondence with the Government of India.

*Fertilizers*

*594 *Q.*—SRI A. A. RASHEED: }
SRI S. LAZAR: } Will the Hon. the Minister for Home be pleased to state the steps taken to overcome the shortage of fertilizers in several districts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: A paper* is placed on the table of the House.

SRI S. LAZAR: May I know the reasons for the sudden shortage of mixtures in the State and my question specifically related to that. May I also know what steps have been taken to have this shortage removed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The shortage is largely due to increase in demand. Of course, the Government are taking all steps that could be taken in order to increase imports of fertilizers.

SRI R. KRISHNASAMI NAIDU: கலப்பு உரங்கள் தயாரிக்க முன் வருகிறவர்களுக்கு, மேலும் லைசென்ஸ் வழங்குவது நிறுத்தி

* Printed as Appendix II on page 669–670 infra.